63

உ

சிவமயம்

சிவகங்கை தேவஸ்தானத்தைச் சேர்ந்த

# அருள்மிகு
# மீனாட்சி சொக்கநாதர் கோயில்
# முறையூர்

(இராமநாதபுரம் மாவட்டம்)





## கும்பாபிஷேக மலர்

## 14-7-75






செ. மாதவன்
உணவு கூட்டுறவுத் துறை
அமைச்சர்

தமிழ்நாடு அரசு
தலைமைச் செயலகம்
சென்னை-600009
11—6—75

முறையூர் அருள்மிகு மீனாக்ஷி சொக்கநாதர் கோயில் குடமுழுக்கு நடைபெறவிருப்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். இந்த ஆலயத்தின் குடமுழுக்கு விழா சிறப்புடன் நடந்தேற பெருமுயற்சி எடுத்துக்கொள்ளும் திருப்பணி குழுவினரை நான் பெரிதும் பாராட்டுகிறேன்.

அருள்மிகு மீனாக்ஷி சொக்கநாதர் கோயில் குடமுழுக்குப் பணி சிறப்புடன் நடந்தேற, என் வாழ்த்துதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

செ. மாதவன்





மாண்புமிகு **மு. கண்ணப்பன்**

அறநிலைய அமைச்சர்

தமிழ்நாடு அரசு

புகழ்மிகு தமிழக ஆலயங்கள்
போற்றி முறையாய் நெறிநடத்தி
மகிமைக் கும்பாபி ஷேகங்கள்
வளமாய் நிகழ்த்திச் சிறப்புற்ற
அன்பும் பண்பும் நிறைகுடமாம்
அறநிலை யத்துறை அமைச்சர் பிரான்.

63-1

எல்லாம் வல்ல எம்பெருமானது இன்னருளால்
எல்லா நலங்களும் எய்துக.

தங்களுடைய ஊரில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் அருள்மிகு மீனாக்ஷி சொக்கநாதர் கோயில் புனரமைப்பு திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா அழைப்பிதழ் கிடைத்து மகிழ்ந்தோம்.

தங்களுடைய சீரிய தலைமையில் திருப்பணிவேலைகள் துரிதமாகவும் சிறப்பாகவும் நடைபெற்று, 14-7-75, சோமவாரத்தன்று, அருள்மிகு மீனாக்ஷி சொக்கநாதருக்கும் பரிவார தேவதைகளுக்கும், ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம், யாதொரு விக்கினமுமின்றி இனிதே நடைந்தேறவும் அதற்கு உதவி செய்தவர்களும், அதில் கலந்து கொள்ளுகிற பக்தகோடிகளும், எல்லா நலங்களும் பெற்றுத் திகழவும் திருவருள் பாலிக்குமாறு, எல்லாம் வல்ல ஸ்ரீ மீனாக்ஷி சொக்கநாதரைப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கிறோம்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்
மதுரை ஆதீனம்

---

## வாழ்த்துச் செய்தி

சிவகங்கை சமஸ்தானம் தேவஸ்தானத்தைச் சேர்ந்த முகவை மாவட்டம் திருப்பத்தூர் வட்டம் முறையூரிலுள்ள அருள்மிகு மீனாட்சி சொக்கநாதர் திருக்கோவிலின் மஹா கும்பாபிஷேக பெருவிழாவை முன்னிட்டு சிறப்பு மலர் ஒன்று வெளியிடப்பட இருப்பது அறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

இச்சிறப்பு மலர் மணம் பரப்பும் நறுமண மலராக அமையவும், முறையூர் திருக்கோவில் மஹாகும்பாபிஷேக பெருவிழா சிறப்பாக நடக்கவும் என் உளங்கனிந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

**து. ச. கார்த்திகேய ராஜா**
சிவகங்கை மன்னர்

# முறையூர் கோயில் திருப்பணி

ச. அழகப்பன்,
தலைவர், திருப்பணிக்குழு.

முறையூர், அருள்மிகு மீனாட்சி சொக்கநாதர் ஆலயத்தைப்புதுப்பித்து, திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடத்த வேண்டுமென்ற, முறையூர் மக்களின் நீண்ட நாளைய எண்ணம் இன்று நிறைவேறுகிறது. ஐம்பது ஆண்டுகளுக்குமுன் முறையூரில் சீரும் சிறப்புமாக வாழ்ந்த பெரி. பழநியப்ப செட்டியார் குடும்பத்தினர் சுமார் மூன்று லட்சம் ரூபாய் செலவில் திருப்பணி செய்து 10—7—1926 அட்சய வருடம் ஆனி மாதம் 26ம் தேதி கும்பாபிஷேகம் செய்தார்கள்.

திருப்பணி செய்ய வேண்டுமென்ற திட்டம் 14—11—1889ல் உருவாகி பெரி. பழ. பொதுக் குடும்பத்திலிருந்து ரூபாய் 40,000 (நாற்பதாயிரம்,) நிதி ஒதுக்கி 4—1—1896ல் திருப்பணி தொடங்கினார்கள். முப்பது வருடத்திற்குப் பின் 1926ல் கும்பாபிஷேகம் செய்தார்கள். அதே போன்று இன்றும் ஜனவரி மாதம் திருப்பணி தொடங்கி அதே ஆனி மாதத்தில் (ஜூலை மாதம்) கும்பாபிஷேகம் செய்யப்படுவது மிகவும் பொருத்தமுடையதாகும்.

1972 ஜனவரி மாதம் முறையூர்க் கோயிலுக்கு திருப்பணிக் குழு அமைக்கப்பட்டது.

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின் துணை ஆணையராகப் பதவி வகித்த திரு. M. A. முருகேசன், B.A., B.L., அவர்கள் 13—12—1971ல் D. Dis. 10820-71 என்ற ஆணை பிறப்பித்து, திருப்பணிக் குழுவை அங்கீகாரம் செய்து சிவகங்கை தேவஸ்தானத்தாருக்கும் அறிவித்தார்கள். தமிழக அரசின் இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையினரிடமும் மற்றும் பொது மக்களிடமும் நிதி உதவி பெற்று திருப்பணி செய்வதென்று முடிவு செய்து அதற்கான பணியைத் தொடங்கினோம். நம் தொகுதி சட்டமன்ற உறுப்பினரும் அமைச்சரும், பழங்கோயில்களைப் புதுப்பிப்பதில் ஆர்வம் மிக்கவருமான மாண்புமிகு செ. மாதவன் அவர்கள் 19—1—1972ல் திருப்பணியைத் தொடங்கி வைத்தார்கள். சென்னை இந்து சமய ஆட்சித் துறையிலிருந்து இரண்டு பொறியியல் வல்லுநர்கள் வந்து நம் கோயிலில்

63-1

செய்ய வேண்டிய வேலைகளுக்கான மதிப்பீடு தயாரித்துக் கொடுத்தார்கள். ராஜகோபுரம் கட்டுவதற்கு ஒரு லட்சம் ரூபாயும், மற்ற விமானங்களைப் பழுது பார்ப்பதற்கும் அம்மன் கோயில் முன் சாலாகார விமானம் அமைப்பதற்கும், உள் பிரகாரத்திற்கு சிமிண்டுத் தளம் போடுவதற்கும், மற்ற வேலைகளுக்கும் 96,000 ரூபாயும் மதிப்பீடு செய்து, வரை படம் தயாரித்துக் கொடுத்தார்கள்.

அறநிலைய ஆணையர் அவர்களிடம் நிதி உதவி கோரினோம். அவர்களும் பொதுநல நிதியிலிருந்து (Common Good Fund) ரூபாய் 25,000 தர ஒப்புதல் அளித்தார்கள். திருப்பணி நிதி உதவி செய்ததில் பழனி அருள்மிகு தண்டாயுதபாணி திருக்கோயிலிலிருந்து ரூ. 15,000 கொடுத்து பெரிதும் உதவினார்கள். இவ்வுதவிக்காக அக்குழுவின் தலைவராக இருந்த சைவ சமயப்புரலவர் திரு. பு. மனோகரன் அவர்களுக்கு நாம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம். பழனித் திருக்கோயில் அறங்காவலராக இருந்த திரு. V. V. C. R. M. கந்தசாமி அவர்களும் எங்கள் திருப்பணிக்கு உதவி கிடைக்கப் பெரிதும் துணையாக இருந்தார்கள்.

நம் கோயிலில் மீனாட்சி அம்மன் விக்கிரகம் காலத்தால் பழுதடைந்தது. புதிய விக்கிரகம் செய்து வைக்கவேண்டுமென்று பக்தகோடிகளும் திருப்பணிக் கமிட்டியினரும் விரும்பினர். இராமநாதபுரம் மன்னர் உயர்திரு S. இராமநாத சேதுபதி அவர்களிடம் சென்று புதிய விக்கிரகம் செய்து கொடுக்குமாறு கேட்டுக் கொண்டோம். அவர்களும் அன்புடன் இசைந்து நல்ல முறையில் செய்து கொடுத்திருக்கிறார்கள். மேலும் இராமேச்சுரம் அருள்மிகு இராமநாதசுவாமி திருக்கோயிலிலிருந்து ரூபாய் 1001 கொடுத்தும் உதவியுள்ளார்கள். மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயத்திலிருந்து அப்போது அறங்காவலர் குழுத் தலைவராக இருந்த கண்டமாணிக்கம் திரு. லெ. நாராயணன் செட்டியார் அவர்கள் ரூ. 1000 கொடுத்து உதவினார்கள்.

ஆலயத் திருப்பணி வேலைகளில் மிகவும் முக்கியமானது விக்கிரகங்களுக்கும் அவற்றின் அடியிலுள்ள பீடத்திற்கும் இணைப்பாக மருந்து சாத்துவது. நம் கோயிலுக்கு வேண்டிய மருந்துகளை கொடுத்து உதவிய திருப்பனந்தாள் ஆதீன கர்த்தர் அவர்களுக்கு எங்களுடைய வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்ளுகிறோம். இந்த மருந்துகளை நாம் பெறுவதற்குத் துணை புரிந்தவர் டெல்லி நண்பர் திரு. M. SP. சண்முகம் ஆவார்கள். அவர்களுக்கு எங்கள் நன்றி.

இத்திருப்பணி நடைபெறுவதற்கு பண உதவி செய்த அன்பர்களுக்கும் உடன் ஒத்துழைத்த திருப்பணிக் கமிட்டி உபதலைவர்கள் திரு. PR. சின்னையா அவர்களுக்கும், PR. சொக்கநாதன் அவர்களுக்

கும், மற்ற கமிட்டி உறுப்பினர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிரும். இந்தத் திருப்பணி நடைபெறுவதற்கு பெரிதும் காரணமாய் இருந்தவர் பெரி. பழ. குடும்பத்தைச் சேர்ந்த திரு. இராமசாமி செட்டியார் அவர்களே. அவர்களது அயராத உழைப்பும், சிறந்த ஆலோசனைகளும் திருப்பணி சிறப்புற அமையப் பெரிதும் காரணமாயின.

இந்தக் கோயில், பரம்பரையாக, சிவகங்கை அரசர்களால் போற்றி ஆதரிக்கப் பெற்று வந்திருக்கிறது. முத்து வடுகநாதத் தேவரின் திருவுருவம், அம்மன் சந்நிதிக்கு எதிரில் இன்றும் இருந்து வருகிறது. அந்தப் பரம்பரையில் இருந்துவரும் கார்த்திகேய வெங்கடாசலபதி ராஜா அவர்கள் தொடர்ந்து இந்தக் கோயில் திருப்பணியில் உற்சாகம் காட்டி வருகிருர்கள். அவர்களுக்கு எங்கள் வணக்கம்.

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையைச் சேர்ந்த மேற்பார்வை பொறியாளர் A. கிருஷ்ணமூர்த்தி அவர்கள், மற்றும் ஆலோசனை உதவிப் பொறியாளர் திரு. R. வேணுகோபால் அவர்களுடைய மேற்பார்வையிலும் திருப்பணி வேலைகள் செம்மையாக நடந்திருக்கின்றன. அவர்களுக்கு எங்கள் நன்றி.

திருப்பணி வேலைகள் எல்லாவற்றையும் ஆரம்பம் முதல் கலைச் சிறப்புடனும் ஆகம விதிகளுக்கு ஏற்பவும் இனிது செய்து முடித்திருக்கும் மதுரை ஸ்தபதி திரு. சி. அசோகன் அவர்களுடைய வேலைத் திறமையையும் போற்றிப் பாராட்டிட விரும்புகிரும். இறுதியாக நன்கொடை தந்த மெய்யன்பர்களுக்கும் மலருக்கு விளம்பரம் தந்த வணிக நிறுவனங்களுக்கும் அனைவருக்கும் ஆசி வழங்கும்படி மீனுட்சி சொக்கநாதர் திருவருளை வேண்டுகிரும்.

கும்பாபிஷேக வேலைகளில் எங்களுக்கு ஆலோசனை கூறி, யாகசாலை ஏற்பாடுகளைக் கவனித்து சர்வசாதகராகப் பொறுப்பேற்றிருக்கும் மதுரை அருள்மிகு மீனுட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் S. தங்கபட்டர் என்ற சந்திரசேகரபட்டர் அவர்களுக்கும் எங்கள் வணக்கம், நன்றி.

இரண்டுமுறை கல்கியில் இலவசமாக விளம்பரம் செய்ததற்கு கல்கி ஆசிரியருக்கு நன்றி.

கும்பாபிஷேகத்திற்கு வேண்டிய சாமான்கள் கொடுத்து உதவிய பிள்ளையார்பட்டிக் கோயில் டிரஸ்டி கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் அவர்களுக்கும் காளையார்கோயிலிலிருந்து சாமான்கள் கொடுத்த தேவகோட்டை AL.AR. சோமநாதன் செட்டியார் அவர்களுக்கும் திரு. AL.AR.SM. நாராயணன் செட்டியார் அவர்களுக்கும் நன்றி.

கும்பாபிஷேகத்திற்கு வேண்டிய பூக்கள் தந்து உதவிய மதுரை மகாலெக்ஷிமி டெக்ஸ்டைல்ஸ் உரிமையாளர் திரு கிட்டப்பா செட்டியாருக்கும், வேஷ்டிகள் தந்து உதவிய திரு. O. சண்முகம் பிள்ளை அவர்களுக்கும் எங்கள் நன்றி.

இப்பொழுது திருச்செந்தூரில் நிர்வாக அதிகாரியாக இருக்கும் முனிசாமி அவர்கள், இராமேஸ்வரம் திருக்கோயில் நிர்வாக அதிகாரியாக இருந்தபோது எல்லா வகையிலும் உதவினார்கள். அவர்களுக்கும் எங்கள் நன்றி.

அம்மன் விக்கிரகத்தை அழகுற அமைத்துக் கொடுத்த இராமேஸ்வரம் திருக்கோயில் ஸ்தபதியார் திரு. சேது அவர்களை மிகவும் பாராட்டுகிறோம்.

கோயிலில் மின்சாரவிளக்குகள் அமைத்த நாளிலிருந்து மின்சார கட்டணம் செலுத்தி வருபவரும், தற்போது புதிதாக இரண்டு விளக்குகள் பொருத்தியதற்காகவும் திரு. முரு. ராமதாஸ் குடும்பத்தாருக்கு நன்றி.

அம்மனுக்கு வேண்டிய சேலைகளும் துண்டுகளும் கொடுத்து உதவிய அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் நிர்வாக அதிகாரி திரு. என். இராமச்சந்திரன் அவர்களுக்கு எங்கள் நன்றி.

இப்போது செய்யப்பெற்றுள்ள திருப்பணிகளின் விவரம் :

(1) அம்மன் சந்நிதி முன் பக்கத்தில் சாலாகர விமானம் அமைக்கப் பெற்றிருக்கிறது.

(2) சுவாமி சந்நிதி முன்புறம் சாலாகர விமானம் அமைக்கப் பெற்றிருக்கிறது. ராஜகோபுரம் கட்டுவதற்கு ஏற்கெனவே உள்ள மண்டபத்தின் அஸ்திவாரம் பலமாக இல்லாததால் சாலாகர விமானம் அமைக்க முடிவுசெய்தோம்.

(3) உள் பிரகாரத்தில் உள்ள விநாயகர், சுப்பிரமணியர் விமானங்கள் பழுதுபார்க்கப் பெற்றிருக்கிறது.

(4) கோயிலுக்கு வெளியேயுள்ள விநாயகர் கோயில்கள் இரண்டையும் புதுப்பித்திருக்கிறோம்.

(5) அம்மன் விக்கிரகம் புதிதாகச் செய்து பிரதிஷ்டை செய்யப் பெறுகிறது.

(6) அம்மன், சுவாமி, நடராஜர், பைரவர், பள்ளியறை, விநாயகர், சுப்பிரமணியர் விமானங்கள் பழுதடைந்திருந்ததைப் புதுப்பித்துள்ளோம்.

(7) சுவாமி, அம்மன் மேல் தளத்தில் கல் பதிக்கப்பட்டிருக்கிறது. பழைய பூச்சுக்களை அப்புறப்படுத்தி, புதிதாக பூசப்பட்டிருக்கிறது.

(8) கோயில் உட் பிரகாரத்தில் சிமிண்டுத்தளம் போட்டிருக்கிறோம்.

(9) எல்லாக்கதவுகளுக்கும் புதிதாக வண்ணம் பூசப்பட்டிருக்கிறது.

# முறையூரில் கும்பாபிஷேகம்

'சோமலெ'

பாலாற்றின் தென்கரையில் அமைந்த வளமான ஊர் முறையூர். இங்கு நகரத்தார்களும் வேறு பல சாதியினரும் வாழ்கின்றனர். இவ்வூர் நகரத்தார்கள் திருமணத்தில் ஒற்றைவடம் சங்கிலி அணிவர். இது ஒன்றே இவர்களுக்கும் ஏனைய நாட்டுக் கோட்டையாருக்கும் உள்ள வேறுபாடு.

வழக்குகளைத் தெரிவித்து நீதிதேடி வந்தவர்கட்கு இவ்வூரார், நியாயம் தவருது முறையாக (நேர்மையாகப்) பஞ்சாயத்து தீர்ப்புச் சொன்னதால் முறையூர் என்ற பெயர் ஏற்பட்டதாகக் கூறுவர்.

ஆற்று வளத்தாலும் வற்ருத கிணறுகளிலிருந்து பம்ப் செட்டுகள் வழியாகவும் இங்கு நெல்லும் கரும்பும் கடலையும் பெரிய அளவில் பயிரிடப் பட்டிருப்பதால் இவ்வூர் வளமாக உள்ளது. இவ்வூருக்குப் போக்கு வரத்து எளிதாகும். மேலும், தெக்கூர், பொன்னமராவதி முதலிய ஊர்களிலிருந்து மதுரைக்குச் செல்ல இவ்வூர் வழியாக ஒரு குறுக்குச் சாலை ஏற்பட்டிருக்கிறது.

முறையூர் ஒரு காலத்தில் போர் வீரர்களுக்கும் தளபதிகளுக்கும் புகழ் பெற்றிருந்தது. இவ்வூர்ச் சிவன் கோயில் சுவர்மீது, வீரர்களின் உருவங்கள் பொறித்திருப்பதைக் காணலாம். இந்த மீனுட்சி சொக்க நாதப் பெருமான்மீது பாடப் பெற்ற பிரபந்தங்களை யெல்லாம் திரட்டிக் கொட்டாம்பட்டிக் கருப்பையா பாவலர் இந்நூற்ருண்டின் தொடக்கத்தில் வெளியிட்டுள்ளார்.

பெரு வள்ளலாய் விளங்கிப் புலவர்களை ஆதரித்த பழ. சண்முகம் செட்டியார் வரலாற்றை இவ்வூரினரும் புகழ்பெற்ற பிரசுரகர்த்தருமான

‘அரு. சொ.’ வெளியிட்டிருக்கிருர். மதுரையில் இரும்பு வணிகத் தொழிலில் புகழ்பெற்ற தெவராயன் செட்டியார் இங்கும் சுற்றளவிலும் பல அறங்களைச் செய்துள்ளார்கள்.

அன்னருடைய வழியில் அவர்தம் அருமை மகன் திரு. ச. அழகப்பன் வணிகத்தோடு பொதுச் செயல்களிலும் ஈடுபட்டு வருகிருர். குறிப்பாக, சொந்த ஊரின் வளர்ச்சியில் அவர் காட்டி வரும் நாட்டமும், சிவ நெறியில் அவர் செலுத்தும் ஆர்வமும் போற்றுதலுக்கு உரியன.

திருப்பணி முயற்சியில் இறங்கியதும் திரு. அழகப்பன் மெய் வருத்தம் பாராது, பொறுமையுடன் பலரையும் சந்தித்து எந்தெந்த வழிகளிலெல்லாம் யார்யாரிடம் உதவி பெற இயலுமோ அத்தனையையும் பெற, தங்களுடைய நேரத்தையும் செல்வாக்கையும் பயன்படுத்தியிருக்கிருர்கள். இவ்வூருக்கு விக்கிரமபாண்டியநல்லூர் என்ற பெயர் இருந்ததாகத் தெரிகிறது.

நகரக் கோயில்களில் ஒன்ருனதும் வன்னியர் சூரக்குடி என்ற பெயரால் இப்போதும் விளங்கும் ஊர் முன்னெரு காலத்தில் பொன்னன் விசாலாயன் என்ற வன்னி மகாராஜாவால் ஆட்சி செய்யப்பெற்றது. அந்த மன்னன் நாள்தோறும் குதிரைமீது அமர்ந்து மதுரைக்கு வந்து மீனுட்சி அம்மனையும் சொக்கநாதப் பெருமானையும் வழிபட்டு வந்தார். வயது காரணமாக முதிர்ந்த நிலையில் அவரால் மதுரைக்கு வர இயலவில்லை. அதை உணர்ந்த அம்மையும் அப்பனும் அவருடைய பக்தியை மெச்சி, அவருக்கு வசதியாக அருகேயுள்ள முறையூருக்கு எழுந்தருளி அங்கே கோயில்கொண்டார் என்று புராணம் கூறுகிறது. திருப்பணிக் குழுத்தலைவர் என்னிடம் காட்டிய ஓலைச்சுவடி ஒன்றில் இவ்விவரங்கள் காணப்படுகின்றன.

திருப்பணி இனிது நிறைவேறுக !

கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெறட்டும் !

---




# கவுரிவல்லப மன்னர்

சிவகங்கை அரண்மனை கண்காணிப்பாளர்

## இ. கே. நாராயண அய்யர்

---

*தற்போதைய சிவகங்கை மன்னர் மேதகு. முத்து விஜய ரகுநாத கவுரிவல்லப து.ச. கார்த்திகேய வெங்கடாஜலபதி ராஜா அவர்* கள் 1948-ஆம் ஆண்டு ஜுலை திங்கள் 13-ஆம் நன்னாளன்று தோன்றினார்கள்.

*தந்தையார்*

நமது மன்னர் பெருந்தகையவர்களின் அன்புத் தந்தையாராகிய காலஞ்சென்ற கவுரிவல்லப து. சண்முகராஜா அவர்கள் (1941-ல் இருந்து 1963-ஆம் ஆண்டு வரை சிவகங்கை அரசராக இருந்தவர்கள்) பிற்கால கவுரிவல்லபர்களுள் சிறந்தவர் என்று எல்லோராலும் போற்றி வணங்கப்படுபவர்களாவர். சிவகங்கைச் சீமையின் பெருங்குடி மக்களுக்கு இவ்வரசர் புரிந்துள்ள தொண்டுகள் ஏராளம். சிவகங்கையிலுள்ள மன்னர் துரைச்சிங்கராஜா நினைவுக் கல்லூரியை நிறுவியப் பெருமை இம் மன்னரைச் சாரும். சிவகங்கை மன்னர் உயர் நிலைப் பள்ளி, மன்னர் ஆரம்பப் பள்ளி, சீமாட்டி ஆலீஸ் மில்லர் பெண்கள் பள்ளி, சண்முக ராஜா நர்சரி பள்ளி முதலிய பள்ளிகளின் புரவலராக பல்லாண்டுகள் இருந்து ஒப்பற்ற கல்விப்பணி புரிந்தவர்கள். சிவகங்கை சமஸ்தானத்தைச் சேர்ந்த பல கோவில்களுக்குத் திருப்பணி செய்து மஹா கும்பாபிஷேகத்தை நடத்தி மகத்தான இறைப்பணி புரிந்துள்ளார்கள். மதுரை ஸ்ரீ மீனாட்சியம்மன் திருக்கோவில் திருப்பணி நிதிக்கு ரூ. 1 லட்சம் நன்கொடை வழங்கி உதவியுள்ளார்கள். நமது தேசப்பிதாவாகிய காந்தி அடிகள்பால் ஈடுபாடு அதிகம் உடையவர்களாகயிருந்தவர்கள். அண்ணல் காந்தியின் நினைவாக சிவகங்கை நகரில் காந்தி பூங்கா நிறுவியுள்ளார்கள். விளையாட்டுகளில் ஆர்வம் மிக்கவர்.

டென்னிஸ், கிரிக்கெட், வேட்டை, கால்பந்து முதலியவற்றில் சிறந்து விளங்கியவர்கள்.

கொடைச் சிறப்பால் மக்கள் போற்றும் மன்னராக விளங்கியவர்கள்.

*தாயார்*

இப்போதைய புதுக்கோட்டை மகாராஜாவாகிய மாட்சிமை தங்கிய ராஜகோபாலத் தொண்டைமான் அவர்களுடைய இளைய சகோதரியாகிய ராணி மதுராம்பாள் ராஜாயி சாகிபா அவர்கள் நமது மன்னர் அவர்களின் அன்புத் தாயார் ஆவார்கள். மறைந்த ராணி மதுராம்பாள் ராஜாயி அவர்கள் சிறந்த நிர்வாகியாக விளங்கியவர்கள். இவர்களின் தவப்புதல்வராகிய நமது அரசர் மைனராகயிருந்த போது அவர்களுக்குச் சொந்தமான சமஸ்தானக் கோவில்கள், அற நிலையங்கள், கல்விக் கூடங்கள் முதலிய பல்வேறு ஸ்தாபனங்களின் நிர்வாகப் பொறுப்பை ராணியார் அவர்கள் திறம்படச் செய்தார்கள் என்பது இங்கு குறிப்பிடத் தக்கது.

*பெயர்க்காரணம்*

நமது மன்னர் அவர்களுடையப் பெயர் கார்த்திகேய வேங்கடாஜலபதி ராஜா என்பதாகும். நமது மன்னரின் தாயார் ராணி மதுராம்பாள் ராஜாயி அவர்கள் கருவுற்றிருந்த சமயம் பிரபல ஜோஸ்யர்கள் பெண் குழந்தை பிறக்கும் என்று கணித்திருந்தார்கள். ஆகவே, ஆண் வாரிசை எதிர்நோக்கியிருந்த ராஜ தம்பதிகளுக்கு கவலையாக இருந்தது. கவலையை மறக்க இருவரும் ஆலயப்பயணம் மேற்கொண்டார்கள். முதலில் திருச்செந்தூர் சென்று திருமுருகனை தரிசித்துவிட்டு, திருப்பதி சென்று வேங்கடவனை வணங்கினர். ராஜ தம்பதிகள் சிவகங்கை திரும்பிய சில மாதங்களுக்குப் பிறகு அவர்களுக்கு அழகிய ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. திருச்செந்தூர் - திருப்பதி தலயாத்திரைகளின் பயனாய்ப் பிறந்த தவப்புதல்வனுக்கு கார்த்திகேய வேங்கடாஜலபதி ராஜா என்று பெயரிட்டு மகிழ்ந்தனர்.

*கல்வி*

கார்த்திகேய வேங்கடாஜலபதி ராஜா அவர்கள் சென்னையிலுள்ள சர்ச்பார்க் கான்வெண்ட்டிலும், டான்பாஸ்கோ உயர் நிலைப் பள்ளியிலும் பயின்று தனது பள்ளி படிப்பை முடித்துவிட்டு, திருச்சி ஜமால் முகமது கல்லூரியில் புகுமுகப் படிப்பு வரை பயின்றவர்கள். சமஸ்தானப் பொறுப்பை இளவயதிலேயே ஏற்கவேண்டியிருந்ததால், மேற்கொண்டு படிக்க அவர்களுக்கு வாய்ப்பில்லை.

*பட்டம்*

மன்னர் து. சண்முக ராஜா அவர்கள் 1963-ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 11-ம் நாளன்று மறைந்தார்கள். கார்த்திகேய வேங்கடாஜலபதி

ராஜா அவர்கள் அன்று சிவகங்கை மன்னர் ஆனார்கள். ஆனால், அப்போது அவர்கள் சட்டப்படி 'மைனர்'ஆகயிருந்தக் காரணத்தினால், 'மேஜர்' ஆனபிறகு, அதாவது 1969-ஆம் ஆண்டு ஜூலை திங்கள் 13-ஆம் நாளன்றுதான் சமஸ்தானத்தின் நிர்வாகப் பொறுப்பினையேற்றார்கள்.

## குடும்பம்

சிங்கம்பட்டி சமஸ்தானாதிபதி மேதகு. டி. என். எஸ். முருகதாஸ் தீர்த்தபதி அவர்களுடைய மூத்த மகளும், ராமநாதபுரம் ராஜா மேதகு. ச. ராமநாத சேதுபதி அவர்களின் மருமகளுமாகிய திருமதி ராணி அபராஜித பங்கஜவள்ளி சாகிபா அவர்களை நமது மன்னரவர்கள் மணந்து கொண்டிருக்கின்றார்கள்.

சிவகங்கை ராஜாவிற்கும், சிங்கம்பட்டி ராஜகுமாரிக்கும் கடந்த 1974-ஆம் ஆண்டு பிப்ரவரி திங்கள் 3-ஆம் நாளன்று சிவகங்கை புதிய அரண்மனையில் நாடும் ஏடும் போற்றும் வண்ணம் திருமணம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

## *பொதுப்பணிகள்*

சிவகங்கையிலுள்ள ராஜா துரைசிங்கம் நினைவுக்கல்லூரியில் ஆட்சிக் குழுத் தலைவராகவும், மன்னர் உயர்நிலைப் பள்ளி, மன்னர் ஆரம்பப் பள்ளி, சீமாட்டி அலீஸ் மில்லர் பெண்கள் பள்ளி, சண்முக ராஜா நர்சரி பள்ளி முதலிய பல கல்விக்கூடங்களில் புரவலராகவும் திருமிகு கார்த்திகேய வேங்கடாஜலபதி ராஜா இருந்து வருகின்றார்கள். கண்ணை இமை காப்பதுபோல், கவுரிவல்லபத் திருமரபினரின் புகழ் பாடும் இக்கல்விக் கூடங்களை இவர்கள் காத்து வருவது பாராட்டத்தக்கது.

கிரிக்கெட் விளையாட்டில் ஆர்வமும், அதன் வளர்ச்சியில் நாட்டமும் கொண்டுள்ள காரணத்தினால் ராமநாதபுரம் மாவட்ட கிரிக்கெட் கழகத்தின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டு பதவிப் பொறுப்பு வகித்து வருகிறார்கள்.

சிவகங்கை நகர் அரிமா சங்கத்தின் ''Charter President'' ஆக பதவி பொறுப்பு வகித்திருக்கின்றார். சிவகங்கை மஹாத்மாகாந்தி நினைவு அறநிலையத்தின் நிரந்தரத் தலைவராகவும் பதவி வகிக்கிறார்கள்.

## *இறைப்பணி*

சிவகங்கை சமஸ்தானம் தேவஸ்தானத்தின் பரம்பரை அறங்காவலராக திருமிகு கார்த்திகேய வேங்கடாஜலபதி ராஜா பொறுப்பேற்ற பிறகு சமஸ்தான திருக்கோவில்கள் யாவும் சிறப்பாகப் பேணப்பட்டு வருகின்றன. இவ்வரசர் பொறுப்பேற்ற பிறகு சிவகங்கை சமஸ்தா

னத்தைச் சேர்ந்த கீழ்க்கண்ட கோவில்களுக்கு மகா கும்பாபிஷேகம் நடத்தியிருக்கின்றார்கள்.

1) அருள்மிகு வீரழகர் திருக்கோவில், மானுமதுரை.
2) அருள்மிகு திருநோக்கிய அழகியநாதர் திருக்கோவில், திருப்பாச்சேத்தி.
3) அருள்மிகு ராஜேந்திர சோழீஸ்வரர் திருக்கோவில், இளையான்குடி.
4) அருள்மிகு மதன வேணுகோபாலப் பெருமாள் திருக்கோவில், இளையான்குடி.
5) அருள்மிகு கோட்டைப் பிள்ளையார் திருக்கோவில், கம்பனூர்.
6) அருள்மிகு மனகோலியம்மன் திருக்கோவில், அம்மஞ்சிப்பட்டி.
7) அருள்மிகு சேவுகப்பெருமாள் அய்யனுர் திருக்கோவில், சிங்கம்புணரி.
8) அருள்மிகு மீனாட்சி சொக்கநாதர் திருக்கோவில், முறையூர்.

கண்டரமாணிக்கம் அருள்மிகு கைலாசநாத சுவாமி திருக்கோவில், சொக்கநாதபுரம் திருக்கோவில், சிவகங்கை அருள்மிகு ராஜராஜேஸ்வரி அம்பாள் திருக்கோவில் முதலிய கோவில்களின் திருப்பணி வேலைகள் வேகமாக நடைபெற்று வருகின்றன. திருவெற்றியூர், பனங்குடி முதலிய ஊர்களிலுள்ள கோவில்களின் திருப்பணி வேலைகள் விரைவில் தொடங்கப் படவிருக்கின்றன.

சிவகங்கை ராஜா அவரது பொறுப்பிலுள்ள சிவகங்கை சமஸ்தானம் தேவஸ்தானம் உபரி நிதியிலிருந்து வட ஆர்க்காடு மாவட்டம் திருவண்ணாமலையிலுள்ள அருள்மிகு அருணாசலேஸ்வரர் திருக்கோவில் திருப்பணிக்கு ரூ. 1 லட்சம் நன்கொடை வழங்கியுள்ளார். சமஸ்தான தேவஸ்தானம் நிதியிலிருந்து அவர் வழங்கிய பல நன்கொடைகளுள் சில கீழ் வருமாறு:-

1) சிங்கம்புணரியிலுள்ள ராணி மதுராம்பாள் ராஜாயி நினைவு (அரசினர்) பெண்கள் உயர்நிலைப் பள்ளிக்கு ரூ. 1 லட்சம்.
2) சிவகெங்கை மன்னர் துரைசிங்கம் நினைவுக்கல்லூரி வளர்ச்சி நிதிக்கு ரூ. 5 லட்சம்.
3) புது டில்லிக்கு அருகில் உள்ள உத்திரசுவாமி மலை திருக்கோவிலுக்கு ரூ. 15,000.

சிவகங்கையில் கல்யாண மண்டபம் ஒன்றும், இலவச சித்த மருத்துவமனை ஒன்றும் நமது மன்னர் நிறுவியுள்ளார்.

சிவகங்கை அருள்மிகு ராஜராஜேஸ்வரி அம்பாள் திருக்கோவிலின் நவராத்திரி தசரா விழாவை ஆண்டுதோறும் விமரிசையாக நடத்தி வருகின்றார்.

### விளையாட்டு வீரர்

எங்கள் அரசர் சிறந்த விளையாட்டு வீரர் ஆவார். கிரிக்கெட், டென்னிஸ், பேட்மின்டன், டேபிள் டென்னிஸ், கால்பந்து போன்ற பல்வேறு விளையாட்டுக்களில் வல்லவர்.

பெருங்காடுகளுக்குச் சென்று வன விலங்குகளை வேட்டையாடுவதில் அலாதி விருப்பம் உடையவர். துப்பாக்கியால் குறிதவறாது சுடுவதில் சூரர்.

### மக்கள் போற்றும் மன்னர்

தற்போதைய கவுரிவல்லப மன்னர் சிவகங்கைச் சீமை மக்களால் போற்றி வணங்கப்படும் ஒரு மன்னர் ஆவார். இவரிடம் சிவகங்கை மக்கள் வைத்திருக்கும் பேரன்பும் நம்பிக்கையும் ஏராளம்.

மன்னரவர்களின் பொதுப்பணிகளை பாராட்டும் பொருட்டு காளையார் கோவில் தெய்விகப் பேரவையின் சார்பில் ஞானத் தந்தை தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள் நமது அரசருக்கு ''தொண்டு நெறிச் செல்வர்'' என்ற பட்டத்தை வழங்கிச் சிறப்பித்துள்ளார்கள். ராஜபாளையம் மறவர் மஹாஜன சபையின் சார்பில் நமது மன்னருக்கு வெள்ளி வீரவாளும், ''ராஜகுலதிலகம்'' என்னும் சிறப்பு விருதும் வழங்கப்பட்டுள்ளன. கடந்த 29—5—1975 அன்று திருவெற்றியூர் கிராமத்து மக்கள் நமது மன்னருக்கு ''இலட்சிய வேந்தர்'' என்னும் சிறப்புப் பட்டத்தை அளித்துள்ளார்கள்.

### குணச்சிறப்புக்கள்

தற்போதைய கவுரிவல்லப மன்னர், தெய்வபக்தியும், தொண்டு மனப்பாண்மையும், கருணை உள்ளமும், ஆற்றலும், அறிவும் உடைய இளைஞர். எதையும் சாதிக்கும் திறன் உடையவர். சிறந்த பேச்சாளர். நல்ல எழுத்தாளர்.

மறைந்த ''தமிழ்க்கடல்'' இராய சொ., ''சிவகங்கை மன்னர், எழுத்து - பேச்சு - செயல் மூன்றிலும் மன்னர்'' என்று அடிக்கடி குறிப்பிடுவார்கள்.

ராஜகுல திலகமாக விளங்கும் நமது மன்னர் பல்லாண்டு வாழ்க! அவர்தம் நற்பணிகள் தொடர்க!!



அஷ்ட பந்தன மருந்துகளை உதவிய திருப்பனந்தாள்
ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித்தம்பிரான் சுவாமிகள்
அதிபர், காசிமடம்



**திரு. K. S. நரசிம்மன், I.A.S.**

பண்டைப் பெருமைக் கருவூலப்
பாங்கில் திகழும் திருக்கோயில்
எண்ணும் இருபத்தைந் தாயிரமும்
இதயம்போலப் பேணி வரும்
தொண்டர் ; பக்தி பரிமளிக்கும்
தோன்றல் கே. எஸ். நரசிம்மன்

சென்னை-34
9-6-1975

**கே. எஸ். நரசிம்மன்,** பி.ஏ.பி.எல்., ஐ.ஏ.எஸ்.,
ஆணையர், அறநிலைய ஆட்சித்துறை.

## வாழ்த்துச் செய்தி

சிவகங்கையரசைச் சேர்ந்த திருக்கோயில்களுள் ஒன்ருய், பிரான் மலை, குன்றக்குடி என்னும் புகழ்மிக்க தலங்களுக்கு மிக அருகில், பாலாற்றங்கரையில் அமைந்து விளங்குவது, முறையூர் அருள்மிகு மீனுட்சி சொக்கநாதர் திருக்கோயிலாகும்.

உலகிலுள்ள மக்கள் எவரும் கூறுகின்ற முறைகளைக் கேட்டு, அங்ஙனம் கேட்ட அளவிலேயே அவற்றை அவர்கள் உவகை கொள் ளும்படி முறைப்படி உதவும் சிறப்புடைமை பற்றி, இவ்வூர்க்கு *முறையூர்* எனப் பெயர் அமைந்தது என்பது வரலாறு.

"அவனியில் எவரும் அறைந்திடும் முறைகேட்டு
அக்கணம் அவரவர் மனத்துள்
உவகை மீக்கொளச் செய்து உதவலால் இதுவே
உயர் *முறையூர்* என உரைக்கும் தவமலிநகர்."

என வரும் சிறந்த பாடல், இவ்வூரின் பெருமையை இனிது புலப் படுத்தும்.

இத்தகைய மாட்சிமிக்க முறையூரில் அமைந்துள்ள, அருள்மிகு *மீனுட்சி சொக்கநாதர்* திருக்கோயில், மிகவும் சிறப்பு வாய்ந்த அழகிய நல்ல திருக்கோயிலாகும். இது சுமார் 50 ஆண்டுகளுக்கு முன் முறையூர் பெரி. பழ. குடும்பத்தினரால் திருப்பணி செய்து, குடமுழுக்கு விழா செய்விக்கப்பட்டது.

கலையழகு மிக்க இத்திருக்கோயிலுக்கு விமானங்கள் பழுது பார்த்தும், கோபுரம் அமைத்தும், புதிதாக அம்மன் சிலை நிறுவியும், ஒரு லட்ச ரூபாய் மதிப்பீட்டில் திருப்பணிகள் செய்து, 14-7-75 அன்று குட முழுக்கு விழா நிகழ்த்துவதற்கான ஏற்பாடுகள் நடைபெற்று வருவது அறிந்து, மிகவும் மகிழ்ச்சி அடைகின்றேன்.

குடமுழுக்கு விழா நன்கினிது நிகழவும், விழாச் சிறப்பு மலர் நன்கினிது அமையவும், அருள்மிகு மீனுட்சியம்மை உடனுறை சொக்க நாதப் பெருமானின் திருவருளை வணங்கி, என் மனமார்ந்த நல் வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முறையூர் அருள்மிகு மீனுக்ஷி சொக்கனுதர் திருக்கோவில் கும்பாபிஷேகத்தைக் காண வந்திருக்கும் மெய்யன்பர்களுக்கு எங்கள் வணக்கம்.



இத்திருக் கோவில் குடமுழுக்கு விழா சிறப்பாக நடைபெற இறைவனை வேண்டுகிறோம்; பக்த கோடிகளுக்கு எங்களின் இதயங் கனிந்த வாழ்த்துக்கள்.

# பயன்மிகு கும்பாபிடேகம்

*S. தங்கப்பட்டர் என்ற சந்திரசேகர பட்டர்*



ஸ்ரீ மீனுட்சி அம்மன் திருக்கோயில், மதுரை.

அறுவகைச் சமயத்தார்க்கும் அவரவர் பொருளாய் வேறும்
குறியது உடைத்தாய் வேத ஆகமங்களின் குறியிறந்தங்கு
அறிவினில் அருளால் மன்னி அம்மையோடு அப்பனுகி
செறிவொழியாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம்.

கும்பாபிடேகம் என்பது, வழிபாடு செய்யப்படும் முறைகளில் அவ்வப் போது ஏற்படும் குறைகள் நீங்குவதற்கும், வழிபாட்டு மூர்த்திகளிலும், வழிபாட்டுத் தலங்களிலும், மூர்த்திகளின் அஷ்டபந்தன, ஜடிபந்தன சேர்க்கைகளிலும் ஏற்படும் குறைகளையும், விமானம் கோபுரம் ஆகியவை களில் ஏற்படும் குறைகளையும் நீக்கி குறைவற வழிபாடு செய்து பலனடை யச்செய்யும் பெருஞ் சாந்தியாகும்.

கும்பாபிடேகத்தை ஆகம வழியோடு செய்வதைத்தான் அம்மை யப்பர் ஏற்றுக்கொள்கிருர் என்பதை அப்பர் பெருமான் அறிவுறுத்துகிருர்.

ஆகம வழிப்படி செய்யப்படும் கும்பாபிடேகமானது சைவ சித்தாந் தப்படி பாசமயக்கத்தில் உழலும் மக்கள் உய்ய பசுபுண்யம், பதிபுண்யம் இரண்டையும் தன்னுள்ளே கொண்டதாகும்.

வழிபடும் மூர்த்தி, கோயில் கொண்டருளும் திருக்கோயிலைப் பழுது நீக்கி பூரணம் பெற்றதாகவும், விமானம் கோபுரம் ஆகியவைகளில் உள்ள பழுதுகள் நீக்கப்பட்டு, வண்ணமிட்டு அழகு மிளிரச் செய்தும், வழிபடும் மூர்த்திகள் குறித்து அபிஷேகம் ஆராதனைகள், சாந்திகள் ஆகியன நிகழ்த்துவதால் பதிபுண்யத்தைத் தருகிறது.

திருக்குட நீராட்டான பெருஞ் சாந்தியை ஆகமவழி நின்று நடத்த அழைத்திருக்கும் ஆதி சைவ அர்ச்சகப் பெருமக்களுக்கும், வேதவிற்பன்னர் களுக்கும், திருமுறை ஓதவந்திருக்கும் திருமறைவாணர்களும், உடைகள் உண்டி, பொருள்கள் அளித்தும், விழாக்காணக் கூடும் பக்தப் பெரு மக்களுக்கு, உணவு வசதியும், அம்மையப்பனின் அருளை அடையக்கூடிய பெருஞ்சாந்தி காணும் வாய்ப்பையும், பக்தி பரப்பும் சொற்பொழிவுகள் இசை நிகழ்ச்சிகள் ஆகியனவும் செய்து கொடுப்பதால் பசுபுண்யப் பலனை யும் அளிக்கின்றது.

இந்தப் பேருண்மையை அறிந்து சிவகங்கை ராஜா உயர்திரு கார்த்தி கேய வெங்கடாசலபதி ராஜா அவர்கள் ஆளுகையில் உள்ள ஸ்ரீ மீனாக்ஷி சொக்கநாதர் கோயிலில் உள்ள பழுதுகளையும், விமானம் கோபுரம் ஆகிய வற்றில் உள்ள பழுதுகளையும் நீக்கி வண்ணத்தோடு அழகுறவும், பூரண மாகவும் செய்தும், வழிபடும் மூர்த்திகளுக்கு முறைப்படி அஷ்டபந்தனம் சேர்த்தும், திருக்கோயிலைப் பூரணமுற்றதாகவும் அழகுறவும் செய்திருக்கும், ஸ்ரீ கார்த்திகேய வெங்கடாசலபதி ராஜா அவர்களும், முறையூர் பொது மக்களும் அயராது உழைத்து, திருப்பணியைச் சிறப்புற நடத்தியிருக்கும் ஸ்ரீ ச. அழகப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் இயங்கும் திருப்பணிக் கமிட்டி உறுப்பினர்களும், சொல்லும் பொருளும் என இரண்டற நிற்கும் ஸ்ரீ அங்கையர்க்கண்ணியம்மையைத் தன்னொரு பாகம் கொண்ட சொக்க நாதப் பெருமான் திருவருளால் எல்லா நலன்களையும் அடைந்து நாட்டிற் கும், வீட்டிற்கும் நற்பயனளிக்கும். இன்னும் பல நற்பணிகளில் ஈடுபட, அருளும் பொருளும், ஆக்கமும் ஊக்கமும் பெற்றுப் பேரானந்தப் பெரு வாழ்வு அடைவார்களாக.

வான்முகில் வழாது பெய்க மலி வளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான் மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மை கொள் சைவ நீதி விளங்குக உலகம் எல்லாம்.

சிவ சிவ.

# கவுரிவல்லபத் திருமரபின் திருப்பணிகள்

*பேராசிரியர், 'செந்தமிழ்ச்சுடர்'*
லெ. இராமனுதன், M.A.,
மன்னர் கல்லூரி
சிவகங்கை

சிவகங்கைச் சீமை, வரலாற்றுச் சிறப்புடையது. ஆட்சி புரிந்த மன்னர்களுள் கவுரிவல்லப மன்னர்கள் வீரத்தாலும் கொடையாலும், சமயத் தொண்டாலும் சிறந்து விளங்கினர். தென்பாண்டி நாட்டில் சிவகங்கையும் இராமநாதபுரமும் இரண்டு பெரும் பேரரசர்களால் ஆளப்பட்ட பகுதிகளாகும். சைவமும் தமிழும் இவ்விரு பேரரசர்களாலும் போற்றிப் பாதுகாக்கப்பட்டன. இந்த மாவட்டத்திலுள்ள ஆலயங்களில் பெரும்பகுதி இவ்விரு மன்னர்களின் ஆட்சிக்குட்பட்டுள்ளன. சிறப்பாக சிவகங்கை மன்னரிடம் 108 ஆலயங்கள் உள்ளன. பெரும்பாலான ஆலயங்கள் மன்னர்களின் பராமரிப்புக்குட்பட்டுள்ளன.

கவுரி வல்லப பரம்பரையைத் தோற்றுவித்தவர் *பெரிய உடையாத்தேவராவார்.* சேதுபதி நாட்டை ஆண்ட கிழவன் சேதுபதி பெரிய உடையாத்தேவரின் வீரச் செயலைக் கண்டு வியந்து அவரைப் பாராட்டும் பொருட்டு முந்நூறு வீரர்களுடன் ஒரு நிலப்பகுதியை இனுமாகக் கொடுத்து *'நாலுகோட்டைப் பாளையக்காரன்'* என்ற பட்டத்தையும் வழங்கிச் சிறப்பித்தார். அன்று முதல் வெற்றி வீரரான பெரிய உடையாத்தேவர், நாலு கோட்டையைத் தலைநகரமாக வைத்து மக்கள் போற்றும் அரசராக ஆட்சி புரிந்து வந்தார்.

பெரிய உடையாத்தேவர், நாலுகோட்டைக்கு அருகில் ஒரு அழகிய சிவன் கோவிலைக் கட்டுவித்தார். அம்மரபில் வந்தவர்கள், அவ்வாலயத்திலிருந்து முடிசூட்டிக் கொள்ளும் வழக்கம் இருந்துள்ளது

கவுரி வல்லபத் திருமரபில் உதய ஞாயிருகத் திகழ்ந்தவர் *சசிவர்ணத்தேவர்* ஆவார். இவர் பெரிய உடையாத்தேவரின் இளைய மகன். அறிவும், ஆற்றலும் மிக்கவர். இராமனுதபுரம் மன்னர் விஜயரகுநாத சேதுபதியின் ஒன்றுவிட்ட சகோதரி ராஜகுமாரி அகிலாண்டேஸ்வரியை

மணந்து கொண்டார். இத்திருமணத்தால் முகவையோடு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. பெருவீரர் சசிவர்ணத்தேவரே சிவகங்கைச்சீமை தோன்றுவதற்குக் காரணமானவர். சீதனமாக இவருக்கு இராமனுத புரம் மன்னர், பலமுள்ள படையும், வரியில்லாத இடமும், பிரான்மலை, திருப்புத்தூர், திருப்புவனம், நாலுகோட்டை முதலிய நான்கு கோட்டைகளையும் வழங்கினுர். தொண்டித்துறைமுகத்தையும் பாதுகாக்கும்படி செய்தார். இவருடைய காலத்தில்தான் சிவகங்கை அரண்மனையும் நகரமும், தெப்பக்குளமும் அமைக்கப்பட்டன.

பெருவீரர் சசிவர்ணத்தேவர் முன்னேர்களைப்போல சைவ சமயத்தை வளர்ப்பதில் கண்ணும் கருத்துமாய் இருந்தார்.

சசிவர்ணர், தம்பெயரால் அமைத்த ஆலயத்திற்கு நாள்தோறும் குதிரையில் வந்து தெரிசித்துச் செல்வது வழக்கம். இன்றும், பிறந்த குழந்தைகளுக்குத் தீராப் பிணி என்றல், சிவகங்கை சசிவர்ணேஸ்வரர் கோவிலுக்குக் குழந்தையுடன் வந்து பால் அபிஷேகம் செய்து பெரிய நாயகியம்மனை வணங்கி அருள்பெற்றுச் செல்லும் மகிமையைக் காணலாம்.

கவுரி வல்லபத் திருமரபில் பெண்கள்குல திலகமாய் விளங்கியவர், வேலுநாச்சியார். இவர் வீரமங்கையாக விளங்கியதுடன், சைவ சமயக் காவலராகச் சிறந்திருந்தார். சிவகங்கை மாநகரின் நடுவில் அழகான ஒரு சிவன் கோவிலைக் கட்டி பல நிவந்தங்களையும், நிலங்களையும் விட்டுக் கொடுத்தார். அரசகுலத்தில் தோன்றிய மங்கையர்க்கரசி எப்படி சமணசமயத்தை விரட்டி சைவசமயத்தை நிலைநாட்டப்பாடுபட்டாரோ அதுபோல வேலு நாச்சியார் அஞ்சா நெஞ்சுடன் கிறிஸ்துவ சமயத்தாரை எதிர்த்து சிவகங்கையில் சைவசமயம் நிலைபெறப் பாடுபட்டார்.

கவுரி வல்லபத் திருமரபின் பெருமைக்குரியவராக விளங்குபவர் இன்றைய சிவகங்கை மன்னர் கார்த்திகேய வெங்கடாசலபதி ராஜா அவர்கள். முன்னேர் புகழையெல்லாம் தன்புகழாக்கிக் கொண்ட தகையோராய், நானிலம் போற்றும் நல்லோராய் சைவசமயக் காவலராய் திகழ்கிறர். சைவசமயக் குரவர்களால் பாடப்பெற்ற திருத்தலங்களாகிய கானப்பேரெயில், திருவெற்றியூர், திருப்புவனம் போன்ற ஆலயங்களைக் கண்ணை இமை காப்பதுபோல் காத்து வருகிறர். நாச்சியாபுரம் அருகேயுள்ள கம்பனூர் ஆலயத்தை அழகுறச் செய்து, உயர்ந்த கோபு

ரத்தை எழுப்பி விண்ணவரும் சிவகங்கை மன்னரின் திருத்தொண்டை அறிந்துகொள்ளுமாறு செய்துள்ளார். திருப்பாச்சேத்தி ஆலயத்தை அழகுறக் கட்டி முடித்துள்ளார்.

விடம் தீர்க்கும் நாயகியாக விளங்கும் அன்னை எழுந்தருளியுள்ள திருவெற்றியூரிலே மக்கள் தங்குவதற்கு 'யாத்திரீகர்' விடுதி ஒன்று கட்டுவித்துள்ளார்.

இன்று குடமுழுக்கு நடைபெறும் முறையூர், பழமையான தலமாகும். இத்தலத்திற்குப் பெயரே 'விக்கிரம பாண்டிய நல்லூர்' என்பதாகும். பிற்காலப் பாண்டியர்களின் இடமாக இவ்வூர் விளங்கியது. பிரான்மலையைத் தலைநகரமாக வைத்து ஆட்சிபுரிந்த காலத்தே இவ்வூர் முக்கியத்துவம் பெற்றிருந்தது. பாண்டியர்கள் சைவசமயப் பற்றுடையவர்கள். எங்கு சென்றாலும் சிவன் கோவில் ஒன்றைக் கட்டியுள்ளார்கள். அதுபோல இங்கும் அழகானதொரு ஆலயத்தைக் கட்டுவித்து அன்னைக்கு முக்கிய இடம் அளித்துள்ளனர். இது "மீனாட்சி சொக்கநாதர்" ஆலயம் என்று அழைக்கப்படுகிறது.

சிவகங்கை அரசர், சசிவர்ண ராஜாவுக்கு வழங்கப்பட்ட நாலு கோட்டைகளுள் பிரான்மலை என்பது ஒன்றாகும். அவர் ஆட்சிக்குட்பட்டிருந்த காலத்தே, பாண்டியர்களால் கட்டப்பட்ட இவ்வாலயத்தைப் போற்றிக் காத்து வந்தார். இவருக்குப் பின் சிவகங்கையை ஆட்சி புரிந்த கௌரி வல்லப முத்து வடுகனாத ராஜா II 1830-31 காலத்தே இவ்வாலயம் திருப்பணி செய்யப்பட்டது. மீண்டும் இவ்வூரைச் சேர்ந்த பெருவள்ளல் பெரி.பழ. பழநியப்ப செட்டியார் குடும்பத்தாரால் இவ்வாலயம் செப்பனிடப்பட்டு குடமுழுக்கு விழா நடத்தப் பெற்றது. முத்துவடுகனாத ராஜாவின் சிலை ஆலயத்துள் வைக்கப்பட்டிருப்பது சிறப்பாகும். கௌரி வல்லப மரபில் சிறப்புடன் ஆட்சி புரிந்த முத்து வடுகனாத ராஜாவின் சிலை கோவிலுக்குள் இருப்பதிலிருந்தே இம்மரபினருக்கு இவ்வூர் ஆலயத்தில் அதிகப்பற்று உண்டு என்பது தெரிய வருகிறது.

தற்போது மீண்டும் ஆலயத்தைப் புதுப்பித்து, கண்கவர் சிறப்புடன் குடமுழுக்கு விழா நடைபெற இவ்வூர் ச. அழகப்ப செட்டியார் செய்திருக்கும் முயற்சி பாராட்டுதற்குரியது. பழம் பெருமை வாய்ந்த முறையூர்க் கோயிலைப் புதுப்பிக்கும் ஆர்வம்கொண்டு குடமுழுக்கு நடைபெறுமாறு செய்திருக்கும் சிறப்பு, மன்னரின் சிறந்த தொண்டை காட்டுகிறது.

*

# அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில்

## மதுரை

## விளம்பரச் செய்தி

1. அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் மகளிர் உயர்நிலைப்பள்ளி ஒன்று ஆலய நிதியிலிருந்து நடத்தப்படுகிறது. ஏழை மாணவிகளுக்கு இலவச மதிய உணவு, நோட்டுப் புத்தகங்கள் வழங்கப்படுகிறது.

2. கல்லுப்பட்டி, காந்திநிகேதனில் மீனாட்சி மாணவர் இல்லம், 20 மாணவர்களுக்கு உணவு, உடை, விடுதி பள்ளிச் செலவுகளுக்கு நிதி உதவி செய்யப்படுகிறது.

3. அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் நூல் நிலையம் ஒன்று தெற்கு ஆடி வீதியில் நடத்தப்படுகிறது.

4. யாத்ரீகர்கள் தங்க, மேலச் சித்திரை வீதியில் சுமார் ரூ. 4,00,000/- மதிப்பீட்டில் விடுதி, பிர்லா விஷ்ரம் என்ற பெயரில் நடத்தப்பட்டுவருகிறது. கட்டிடம் கட்டும் செலவில் ஒரு பகுதி தொழில் அதிபர் பிர்லா அவர்களால் நன்கொடையாக கொடுக்கப்பட்டது.

5. ஆயிரங்கால் மண்டபத்தில் எழில்மிகு கலைக்கூடம் நடத்தப் படுகிறது.

6. கூடல் செங்குளம் பண்ணை, திருக்கோயிலின் நேரடிப் பார்வை யில் விவசாயம் நடைபெறுகிறது.

7. ஏழை மக்களுக்கு ஆலய நிதியிலிருந்து இலவச திருமணம் நடத்தப்படுகிறது.

8. திருப்பரங்குன்றத்தில் முதியோர் இல்லம் ஒன்று நடத்தப்படு கிறது. இதில் ஆதரவற்ற பெண்களுக்கு உணவு, இருப்பிடம், வசதிகள் அளிக்கப்பட்டு வருகின்றன.

9. இத்திருக்கோயிலின் உபகோயில்களில் படைவீடுகளில் ஒன்றான திருப்பரங்குன்றம், அருள்மிகு சுப்பிரமணியசுவாமி ஆலயம், இங்கு இரண்டு காலியான மண்டபங்கள் உபயோகத்திற்கு கொடுக்கப்பட்டு வருகிறது.

10. சமயக்குரவர்களில் ஒருவரான அருள்மிகு மாணிக்கவாசகப் பெருமான் அவதரித்த ஊரான திருவாதவூரில் உள்ள அருள்மிகு திருமறை நாத சுவாமி கோயில், இத்திருக்கோயிலின் உபகோயிலாகும்.

11. ஆன்மீகப் பெருமக்கள் அனைவரும் தமிழ் வளர்த்த தலைநகர் பாண்டிப் பழம்பதி மதுரை மாநகரில் அன்பர்களுக்கு அருள்வழங்கும் அருள்மிகு மீனாட்சி சொக்கநாதரைக் கண்டு வணங்கி அருள்பெற்று உய்ய திருவாலவாய்க்கு வருகை தருவீர்களாக.

திரு. என். பொன்னப்பன் அவர்கள்,
அறங்காவலர் குழுத் தலைவர்.
திரு. டி. தியாகையா அவர்கள்,
திரு. ஆர். கோபால்சாமி அவர்கள்,
திரு. கே. எஸ். இராமகிருஷ்ணன்,
எம்.எல்.ஏ., அவர்கள்

M P.N. பொன்னுசாமி அவர்கள்,
அறங்காவலர்கள்

என்.எஸ். இராமச்சந்திரன்,
பி.ஏ., பி. எல்.,
உதவி ஆணையர்/
நிர்வாக அதிகாரி.



சிவகங்கை மன்னருடன் — திருப்பணிசெய் குழுத்தலைவர்



மாதவனும் அமைச்சருடன் — வளஞ்சுரக்கும் அழகப்பர்







செந்தமிழர் வீரத்தின் சிறப்பைக் காட்டும்
சிவகங்கை மாமன்னர் - கார்த்தி கேயர்
சொந்தமுடன் சமஸ்தானப் புகழைக் காத்துத்
தோன்றுகின்ற இளந்தென்றல் தோற்றம் காண்க !



இரும்புடனே பழகிவரும் தொழிலைப் பெற்றார்
இதயத்தில் எப்பொழுதும் கரும்பைப் பெற்றார்
திரும்புகிற பக்கமெலாம் தமிழைப் பேணித்
திருப்பணிசெய் அழகப்பர் தோற்றம் காண்க!



அருள் சுரக்கும் மீனாட்சி சொக்க நாதர்
ஆலயத்தில் உற்சவரின் அழகுத் தோற்றம்
திருவளர்க்கும் தனியம்மன் வலத்தே நிற்கத்
திகழ்கின்ற பேரழகுப் பொலிவைப் காணீர்.



முக்கண்ணன் திருப்பணியை முதலில் செய்து
முறையூரின் பெயர்காத்த பழனி யப்பர்
திக்கெல்லாம் தனைவணங்கத் திருக்கை கூப்பிச்
சிவனடியே சிந்திக்கும் சிறப்பைக் காணீர்.

# அன்னை மீனாட்சி

சிந்தனைக் கவிஞர் பெரி. சிவனடியான், எம்.ஏ., பி.டி., புதுவயல்.

மாமதுரை மீனாள் வழுதி குலங்காத்துத்
தேமதுரத் தமிழோசை செவிகுளிரக் கேட்டமகள்

அங்கயற் கண்ணியெனும் அலங்காரப் பெயருடையாள்
மங்களங்கள் பொங்க வாழ்வளிக்கும் சீமாட்டி

பாண்டியர்கை ஓங்கப் பக்கத் துணைபுரிந்த
தூண்டா மணிவிளக்கு சொக்கலிங்கர் பெருமாட்டி

வானளந்த கோபுரமும் மலையளந்த மண்டபமும்
தேனளந்த மந்திரமும் சேரக் கொலுவிருக்கும்

பாரளந்தான் தங்கை, பனிமலையான் நற்றுணைவி
சீரளந்த தேவி தென்பாண்டி நாட்டரசி

ஒற்றைக்கல் மூக்குத்தி உலகிற் கொளியூட்டும்
பொற்சிகர நற்கிரீடம் பொன்னுலகி லேமின்னும்

இடுப்பிலணி மேகலையோ ஏழுலகையும் இணைக்கும்
உடுத்தியுள பட்டாடை ஒருநூறு கோடிபெறும்

தாமரைப்பூப் போன்ற தலைநகரைப் பெற்றவள்தம்
தாமரைப்பூம் பாதத்தால் தலைநகரை வலம்வருவாள்

திங்களின் பேரெல்லாம் திருவீதி கொண்டிருக்க
சங்கம்வைத் தாண்ட தமிழ்ச்செல்வி மீனுட்சி

முக்கூடல் போல முறையூர் நகரதையும்
எக்கால முங்காக்க எழுந்தருளி வந்தமகள்

அன்றுவந்த போதே அடைந்தாள்ஓர் ஆலயத்தை
இன்றுதிருப் பணிகண்டும் ஏற்கின்ருள் குடநீரை

மதுரை நகரிருந்து வாழ்வரசி பெற்றதெலாம்
இதுநகர்க்கு வந்தும் என்றென்றும் ஏற்கின்ருள்

பசுமலையைக் கண்டதுபோல் பறம்பு மலைகொண்டாள்
பசுமைதரும் வைகையைப்போல் பாலாறும் பெற்றுள்ளாள்

பொற்ரு மரைக்குளம்போல் புதுக்குளமும் தாம்பெற்ருள்
கற்ருரும் வள்ளல்களும் கணக்கின்றித் தாம்ஈன்ருள்

ராஜகோ புரம்மட்டும் நமக்கேனே பாக்கிவைத்தாள்?
ராஜகோ புரம்அதையும் நாள்விரைவில் கூட்டிவைப்பாள்

ஆண்டுதோ றும்திரு நாள், அழகுப்பொன் தேரோடும்
ஈண்டுவரும் ஆடவர்கை இணைவடத்துக் கயிருடும்

ஆணோடு பெண்கள் அகங்குளிரக் கும்பிடுவார்
தேனோடும் பாலோடும் திருவருளால் வாழ்க்கையிலே

அன்னைமீ னுட்சி அருள்மழையைப் பெய்துதரப்
பொன்சேர் முறைநகர் பூவடியைச் சுற்றிவர

இன்றுபோல் மீனுட்சி எல்லோரை யுங்காக்க
என்றும் இருப்பாள் இணைந்து



# நன்கொடையாளர்கள்

*27-6-1975 ம் தேதி முடிய ரூ. 50ம் அதற்கு மேலும் நன்கொடை கொடுத்துதவியவர்கள் விவரம்.*

— * —

| | |
|---|---|
| தமிழக அரசு இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை. | ரூ. 30,000-00 |
| அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில், பழனி. | ரூ. 15,000-00 |
| முறையூர் கிராமத்தார்கள் | ரூ. 10,001-00 |
| முறையூர் ராம. தெ. தெவராயன் செட்டியார் குடும்பத்தார் | ரூ. 2,502-00 |
| M. S. சதாசிவய்யர் குடும்பத்தார், மதுரை | ரூ. 1,751-00 |

புதுக்கோட்டை முரு. சோலையப்பன் வசூலித்து அனுப்பியது:

| | | |
|---|---|---|
| D. சுரேஷ் சேட், புதுக்கோட்டை | ரூ. 101-00 | |
| M. ஜெகனுதன், கோவை | ரூ. 101-00 | |
| சீதாராம் & கோ., திருச்சி | ரூ. 101-00 | |
| ரெ. சண்முகம் ஆசாரி புதுக்கோட்டை | ரூ. 55-00 | |
| பாலகிருஷ்ண மோகனதாஸ் சதாசிவம், மதுரை | ரூ. 51-00 | ரூ. 1,030-50 |
| M. R. பலராமய்யர், சேலம் | ரூ. 51-00 | |
| ராமஹரி சேட், புதுக்கோட்டை | ரூ. 51-00 | |
| SP. சீனிவாசன் செட்டியார், அறந்தாங்கி | ரூ. 51-00 | |
| மற்றும் சில்லரையாக வசூலித்து அனுப்பியது | ரூ. 468-50 | |

| | | |
|---|---|---|
| அருள்மிகு இராமநாத சுவாமி திருக்கோயில், இராமேச்சுரம் | ரூ. | 1,001-00 |
| அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் மதுரை | ரூ. | 1,000-00 |
| M. தெய்வமணி ஆச்சி (M. அன்பழகன் நினைவாக) | ரூ. | 1,000-00 |
| AL. A. அண்ணாமலை செட்டியார், கோட்டையூர் | ரூ. | 501-00 |
| சுப. அ. குடும்பத்தார், பனையப்பட்டி | ரூ. | 501-00 |
| அய்யாக்கண்ணு நாயுடு, அய்யாபட்டி | ரூ. | 252-00 |
| லெ. நாராயணன் செட்டியார், கண்டரமாணிக்கம் | ரூ. | 251-00 |
| புதுவயல் ராம. ராஜசேகரன் வசூலித்து அனுப்பியது | ரூ. | 234-00 |
| முறையூர் சித. சோமசுந்தரம் செட்டியார் வசூலித்து அனுப்பியது | ரூ. | 163-00 |
| பெரி. சிதம்பரம், முறையூர் | ரூ. | 201-00 |
| VR. SV. SP. சிகப்பி ஆச்சி, புதுவயல் | ரூ. | 201-00 |
| நா. ரெங்கசாமி பிள்ளை, திருப்பத்தூர் | ரூ. | 151-00 |
| சுப. அருணாசலம் பிள்ளை, முறையூர் | ரூ. | 151-00 |
| V. P. R. பெருமாள், முறையூர். | ரூ. | 126-00 |
| AR. சுப்பிரமணியன், மதுரை | ரூ. | 101-00 |
| A. V. S. நடராஜ முதலியார், ராஜபாளையம் | ரூ. | 101-00 |
| V. V. C. R. M. கந்தசாமி, மதுரை | ரூ. | 101-00 |
| நீலகண்டன் பிரதர்ஸ், மதுரை | ரூ. | 101-00 |
| Rm. சேவுகப்பெருமாள், சிங்கம்புணரி | ரூ. | 101-00 |
| வெங்கடாசலம் பிரதர்ஸ், சிங்கம்புணரி | ரூ. | 101-00 |
| P. N. S. ராமசாமி பிரதர்ஸ், சிங்கம்புணரி | ரூ. | 101-00 |
| திருமதி பழ. சி. அண. முரு. செல்லம்மை ஆச்சி முறையூர் | ரூ. | 101-00 |
| முரு. சோலையப்பன், முறையூர் | ரூ. | 101-00 |

| | | |
|---|---|---|
| பெரி. சின்னையா அம்பலம், முறையூர் | ரூ. | 101-00 |
| S. கதிரேசன், S. S. கோட்டை | ரூ. | 101-00 |
| M/s. சுந்தர மூர்த்தி பாங்கர், முத்துச்சாமிபட்டி | ரூ. | 101-00 |
| S. மெய்யப்பன், M. சூரக்குடி | ரூ. | 101-00 |
| M/s. உமா மகேஷ் அன் கோ., A. காளாப்பூர் | ரூ. | 101-00 |
| பழ. அழகு வேளார், முறையூர் | ரூ. | 101-00 |
| சோம. ராமநாதன் முறையூர் | ரூ. | 101-00 |
| Rm. சோமசுந்தரம், முறையூர் | ரூ. | 100-00 |
| M. S. பழனியப்பன், முறையூர் | ரூ. | 100-00 |
| இந்தியன் பாங்க், விளக்குத்தூண் கிளை, மதுரை | ரூ. | 100-00 |
| M/S கிருஷ்ணா இரும்புத் தொழிற்சாலை, மதுரை | ரூ. | 100-00 |
| மா. வயிரவ சுந்தரம், முறையூர் | ரூ. | 51-00 |
| S. B. ராமகிருஷ்ணன், மதுரை | ரூ. | 51-00 |
| R. துரைச்சாமி, மதுரை | ரூ. | 51-00 |
| அழ. தங்கமுத்து, சூரக்குடி | ரூ. | 51-00 |
| வெ. சொ. அண்ணாமலை செட்டியார், முறையூர் | ரூ. | 51-00 |
| அண. ஜெயராஜன் செட்டியார், முறையூர் | ரூ. | 51-00 |
| K. R. ராமனுதன், மதுரை | ரூ. | 51-00 |
| K.S. மார்கபந்து, சென்னை | ரூ. | 51-00 |
| சா. கருணாகரன், காரைக்குடி | ரூ. | 51-00 |
| A. V. மாசிலாமணி, மதுரை | ரூ. | 51-00 |
| T. G. ராஜாராம், மதுரை | ரூ. | 51-00 |
| P.S.P. காமாக்ஷி செட்டியார், மதுரை. | ரூ. | 50-00 |
| சிவகங்கை சமஸ்தானம் தேவஸ்தானம் உபரி நிதியிலிருந்து சிவகங்கை ராஜா திரு. கார்த்திகேய வெங்கடாஜலபதி அவர்கள் நன்கொடை தருவதாக உறுதியளித்திருக்கிறார்கள் | ரூ. | 6,000-00 |
| ராம. தெ. மு. மணிவாசகன் என்ற சீதாராமன் | ரூ. | 1,001-00 |

# 'திருப்பணி கண்டார்'

கவிஞர் சொ. மகாலிங்கம்
முறையூர்

சீர்வளரு மைந்துநில நாட்டிற் கீர்த்தி
திகழ்முறையூர் வளமைநிதஞ் செழிக்க வந்த
கார்வளரு மும்மதவேள் முகவன் தொந்திக்
கணபதிபொற் சரணமலர் பணிந்து போற்றி
பார்வளரப் பைந்தமிழின் செல்வன் பாதம்
பணிந்துநின்று முறையூரின் சிறப்புத் தம்மை
சீர்சொக்க நாதனெனும் புலவர் மைந்தன்
செப்பிடவே அருள்வழங்கும் தேவி போற்றி!

துதிபெருகும் முறைசைவளர் சுமுகன் சின்னத்
தம்பியருள் சோமனென வந்த பாலன்
அதிகவர முதவுசொக்க ரங்கயற் கண்ணி
ஆர்க்குஞ்சிரை மீட்டமகா சாத்தர் கருப்பர்
கதியருள்பி டாரியின்னி யம்மை காட்சி
கனந்தருபொன் னுண்டகருப் பண்ணர் போற்றி
மதுரமொழி மார்பனுக்கு மக்கள் வெள்ளம்
மகிழ்ச்சியுடன் பாட்டிசைக்கும் சிறப்பைக் காணீர்!

ஐந்துநில நாடனுக்கும் அன்னம் ஆக்கும்
ஆலயமே படைத்திட்ட அறிஞர் கூட்டம்
பைந்தமிழின் திறமறிந்து புலவர் தம்மைப்
பரிந்துரைத்து வளர்த்துவந்த பண்பா ளர்தம்
நைந்தஉளம் கொண்டவர்கள் இல்லை என்று
நயமுடனே அவர்தம்மைப் பேணிக் காத்து
ஐந்துநில முறையூரில் குமண னாக
அமர்ந்திருந்தார் வணிகர்குலக் கோமான் பல்லோர்!

---



**திரு. பு. மனோகரன்**

முன்னாள் தலைவர், அறங்காவலர் குழு

அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில், பழனி

இவர் தமிழ்நாடு தெய்விகப் பேரவை உறுப்பினராயும் ஹிந்து விஸ்வ பரிஷத்தின் மதுரை மாவட்டத் தலைவராகவும் பணியாற்றி வருகிறார். பழனித் திருக்கோயில் பொறுப்பேற்றிருந்தபோது தமிழ்நாட்டில் ஏராள மான கோயில்களுக்கு நிதி உதவிசெய்தார்கள். நம் கோயிலுக்கும் வருகைதந்து நமது தேவைகளை உணர்ந்து, தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் நிதியிலிருந்து ரூ. 15,000/ வழங்கியுள்ளார்கள். அவர்கள் வாழ்க! அன்னார் தொண்டு தொடர்ந்து சிறக்க!

மதுரை
2—7—75

வி. எஸ். கோதண்டபாணி, பி. எஸ்சி., பி. எல்.
உதவி ஆணையர்,
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
மதுரை.

*அன்புடையீர்,*

*முறையூர் அருள்மிகு மீனாட்சி சொக்கநாதர் கோயில் புனரமைப்பு திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா 14-7-75-ம் தேதி நடைபெற இருப்பதை கண்ணுற்றும், இவ்விழாவிற்கு மலர் வெளியிட இருப்பதை அறிந்தும் பெருமகிழ்ச்சியுற்றேன்.*

*இந்த திருக்குட நன்னீராட்டு பெருவிழா இனிது நடைபெறவும், இவ்விழா மலர் எல்லா வகையிலும் மணமுற்று அமையவும் எல்லாம் வல்ல முறையூர் அருள்மிகு மீனாட்சி சொக்கநாதரை வேண்டிக் கொள்கிறேன்.*

தங்களன்பன்
*வி. எஸ். கோதண்டபாணி*

---

திரு. சி. எஸ். தீனதயாளு, B Sc., B.L. அவர்கள்
(துணை ஆணையர் தமிழ்நாடு இந்து அறநிலைய ஆட்சித்துறை.)

**வாழ்த்துரை**

முறையூர் அருள்மிகு மீனாட்சி சொக்கநாதர் கோயில் குடமுழுக்கு விழா நடைபெற இருப்பதை அறிந்து மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன். விழா இனிது நிகழ்வதாக.

இந்தத் திருப்பணிக்காக அரும்பாடுபட்ட திருப்பணிக் குழுவினரையும் குறிப்பாகவும் சிறப்பாகவும் அதன் தலைவர் மதுரை திரு. எஸ், அழகப்பன் அவர்களுடைய பெரு முயற்சியையும் பெரிதும் பாராட்டுகிறேன்.

மதுரை,
16—6—75.

சி. எஸ். தீனதயாளு

# " வாழ்விக்க வேண்டுமம்மா "

சொ. சொ. மீ. சுந்தரம், எம்.காம்., மதுரை.

திருமங்கை வந்துபணி செய்கின்ற மேன்மையுறும்
செல்வரில் பெரிய செம்மல்
திரையாடு கடலோடி முறையூரை வாழ்வித்த
தேவராயன் என்ற செல்வர்
தருமநெறி ஒன்றையே மூலதன மாய்வைத்த
தனவணிகர் மரபு வாழத்
தன்னுடைய மைந்தரை அறம்பேணி வாழ்கின்ற
தவ வாழ்க்கை வாழ வைத்தோர்
கருமவினை மாறவே அவருடைய பிள்ளைகள்
கண்ணுதல் ஆல யத்தைக்
கட்டியொரு குடமுழுக் காற்றுகிற வேளையில்
காத்தருள வேண்டு மம்மா
மருவியுனை நாடியொரு கால்மாறி விளையாடும்
வள்ளலின் பாதி யானுய்
மதுரமிகு தமிழாகி இதயமிசை குடிகொண்ட
மதுரைமீ னுட்சி உமையே.

ஐந்துகர னுக்கென்று நன்மருது பட்டியில்
ஆலயம் கட்டி வைத்தோர்
அழகுவள் ளிப்பெயர் நூலகக் கட்டிடம்
அரசினர்க் கீந்த செல்வர்
சிந்தனைச் செம்மலாய் நின்றவர் தன்னுடைய
தெய்வமகள் பேர்நிலைக்கச்,
சீருடைய உமையவள் ஆசிரமம் அதனையே
செம்மையாய்க் கட்டிவைத்தோர்
வந்தவழி மரபிலே தன்னுடைய மைந்தனே
மருத்துவத் தொண்டுசெய்ய
மாண்புடைய வாழ்க்கையை வாழ்ந்ததெவ ராயனுர்
மடியிலே தவழ்ந்திருந்த
மைந்தர்கள் செய்கின்ற குடமுழுக் கிதனையே
வாழ்விக்க வேண்டுமம்மா
மதுரமிகு தமிழாகி இதயமிசை குடிகொண்ட
மதுரைமீ னுட்சி உமையே.

கன்னியே உன்மதுரை ஆலயப் பணியினைக்
கண்ணெனக் காப்பதற்காய்க்
காற்கோடி செலவிட்ட நாகப்ப வள்ளலைக்
கண்டவள் நீயல்லையோ ?
மன்னுபுகழ் ஐயாற்று நற்பதியில் கற்கோயில்
மாதுனக் காக்கிவைத்த
மரபிலே இப்பொழுது முறையூர்த் திருப்பணி
வந்திடக் காணுகின்ருய்
நன்னயச் செல்வராம் அழகப்பர் தம்பிமார்
நாடியே செய்துவக்கும்
நல்லபணி ஈடேற அன்னையே உன்னருள்
நல்கியே காக்க வேண்டும்
மன்னவர் மடியிலே மின்னலாய் ஒளிவீசி
வந்திடும் தெய்வ மயிலே
மதுரமிகு தமிழாகி இதயமிசை குடிகொண்ட
மதுரைமீ ளுட்சி உமையே.

---

எங்கள் ஊர்

# முறையூர்

ச. அழகப்பன், தலைவர், திருப்பணிக் குழு

" அவனியில் எவரும் அறைந்திடும் முறை கேட்டு
அக்கணம் அவரவர் மனத்துள்
உவகைமிக் கொளச் செய்து உதவலால் இதுவே
உயர் முறையூர் என உறையூர் தவமலிநகர் "

என்பது புலவர் வாக்கு.

வழக்குரைத்து, நியாயம் கேட்டு வந்தவர்க்கு சற்றுந் தாமதம் செய்யாமல் உடனுக்குடன் அவர்களுக்கு நீதி வழங்குவதனால் இதற்கு முறையூர் என்று பெயர் வந்ததாக ஒரு புலவர் கூறுகிறார். முறையோடு வாணிபம் நடத்தி வளம் கொழிக்க பலர் வாழ்ந்ததால்தான் முறையூர் எனப்பெயர் பெற்றதென்றும் சொல்லுவர்.

வெள்ளாறது வடக்காம் ; மேற்குப் பிரான்மலையாம் ;
தெள்ளார்புனல் வைகை தெற்காகும் ; ஒள்ளியசீர்
எட்டிக்கடல் கிழக்காம் ; இஃதன்றோ நாட்டாண்சேர்
செட்டிநாட்டு எல்லை எனச்செப்பு

என்று பாடுவார் முத்தப்ப செட்டியார் பாடியபடி செட்டிநாட்டு எல்லைக்குட்பட்ட பிரான்மலைக்கு ஆறு மைல் தொலைவிலும், முருகன் திருத்தலங்களில் ஒன்றான குன்றக்குடிக்கு 15மைல் தொலைவிலும் இந்த முறையூர் சீருடனும் சிறப்புடனும் இருக்கிறது. வள்ளல் பாரி வாழ்ந்த பறம்புமலைதான் காலத்தால் மருவி இப்போது பிரான்மலை என்று அழைக்கப்படுகிறது. இராமநாதபுரம் மாவட்டம் சிங்கம்புணரி ஊராட்சி ஒன்றியத்தில், முறையூர் ஊராட்சிமன்றம்தான் சிறந்தது.

தற்போது இங்கு சுமார் 4000 மக்கள், உழவைத் தொழிலாகக் கொண்டு வாழ்கின்றனர். நீர் வளமும் நில வளமும் அமையப்பெற்ற ஊர். ஊருக்கு வடக்கே பாலாறு ஓடுகிறது. ஆற்றின் தென் கரையில் ஸ்ரீ மீனாட்சி சொக்கநாதர் ஆலயம் மிக அழகாக அமைந்

திருக்கிறது. இது சிவகங்கை தேவஸ்தான நிர்வாகத்திற்குட்பட்டது. ஆலயத்திற்குமுன், ஊரணி ஒன்றும் கற்களால் கட்டப்பட்டுள்ளது. இது முறையூர் நகரத்தார்களால் கட்டப்பட்டது. கோவில், இவ்வூரில் சீரும் சிறப்புமாக வாழ்ந்து புகழ்பெற்ற பெரி. பழ. குடும்பத்தாராலும் திருப்பணி செய்யப்பட்டு குடமுழுக்கு செய்யப்பட்டது. வள்ளல் சண்முகனுருக்கு அடுத்து, அவர் காலத்திலேயே இவ்வூரில் தோன்றிய வள்ளல் தெவராயன் செட்டியார் அவர்கள் பெயரால் பல அறப்பணிகள் இன்றும் நடந்து வருகின்றன. அதற்கான ஒரு அற நிறுவனமும் உள்ளது. அதிலிருந்து பேருந்துநிலையம் கட்டப்பட்டிருக்கிறது. பாரி வாழ்ந்த பறம்புமலையை அடுத்துள்ள முறையூரிலும் வள்ளல்கள் தோன்று வது இயற்கைதானே.

மகாத்மா காந்தி வாழ்ந்த காலத்திலேயே 1937ம் ஆண்டில் அவ ருக்கு முதல் சிலை அமைத்த பெருமை முறையூருக்கே சேரும்.

"பூமலிந்து ஒங்கும் பொழில்களும், தடங்களும்
நந்தன வனங்களும், நந்தா வளத்தொடு
சீர் சார்ந்து இலங்கும் செல்வமாநகரம்."

என்று வீமகவி பாராட்டிப்பாடியிருக்கிறுர்.

இவ்வூரில் ஆண்டுதோறும் ஆனி மாதத்தில் ஸ்ரீ மீனுட்சி சொக்க நாதர் ஆலயத்தில் திருவிழா நடைபெறுகிறது. விழாக்காலத்தில் பல இன்னிசைக்கச்சேரிகளும், நாடகங்களும், நாதசுரக் கச்சேரிகளும் நடை பெறும். மக்களில் பெரும்பாலோர் கலாரசனை மிகுந்தவர்கள்.

"சீர் ஏறி எய்ர் முறை யூர் சிவபெருமான்
உமையோடு சிறந்த கீர்த்தித்
தேர் ஏறி திருவதிப் பவனிவரக்
கண்டு தரிசிக்கச் செய்தான்,"

என்று கவிபாடி, புலவர்கள் முறையூர் மக்களால் பாராட்டி இருக்கிறுர்கள்.

முறையூரின் சிறப்பைப்பற்றி பாடாத அக்காலப் புலவர்களே இல்லை என்று சொல்லலாம். வீமகவி உ. வே. சாமிநாதய்யர், வேம் பத்தூர் பிச்சுபாரதி, பண்டிதமணி கதிரேசன் செட்டியார், அரசஞ் சண்முகனுர் முதலியவர்கள் முறையூரின் சிறப்பைப்பற்றி பல பாடல்கள் பாடியிருக்கிறுர்கள். பல புலவர்களை ஆதரித்த ஊர் முறையூர்.

ஆற்றுக்கு வடக்கே ஒரு அம்மன் கோயில் இருக்கிறது. அம்மன் பெயர் செல்லாயி அம்மன். மிக வரதையானது. முறையூர் மக்கள் தங்கள் கோரிக்கைகள் நிறைவேற இங்கு பிரார்த்தனை செய்து கொண்டால் குறைகள் தீர்வதாக நம்புகின்றனர்.

முறையூருடன் மதுரை, சிவகங்கை, காரைக்குடி, சிங்கம்புணரி, பொன்னமராவதி முதலிய பெரிய ஊர்களை இணைக்கும் நேர் பஸ் வசதி உண்டு. குடிதண்ணீருக்குத்தான் இதுவரை போதுமான வசதிகள் இல்லாமலிருந்தது. இப்பொழுது சமுதாயக்கேணி அமைத்து, ஊரின் பல இடங்களிலும் அதிலிருந்து குழாய் மூலம் தண்ணீர் கிடைக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

இங்கு சர்க்கார் உயர்நிலைப் பள்ளியும் ஊராட்சி ஒன்றிய ஆரம்பப் பாடசாலையும், மருத்துவமனையும், மதுரை வங்கியின் கிளையும் உள்ளன. புதிதாக மருத்துவமனை ஒன்று தெவராயன் செட்டியார் இதைக் துவக்கி அறக்கட்டளையிலிருந்து கட்ட ஏற்பாடாகிக் கொண்டிருக்கிறது. பாலாற்றிற்குப் பாலம் போடவேண்டும் என்ற நெடுநாள் கனவு அமைச்சர் மாண்புமிகு செ. மாதவன் அவர்களுடைய முயற்சியாலும், ஆதரவாலும் நிறைவேறிவிட்டது. அது நாங்கள் செய்த பாக்கியம். நூலக ஆணைக்குழுவின் கிளை நூலகம் ஒன்றும் உள்ளது.

விவசாயத்துறையிலே இங்குள்ள மக்கள் மிக ஆர்வமுள்ளவர்கள். மின்சாரத்தைப் பயன்படுத்தி சுமார் 150 பம்பு செட்டுகள் வரை இயங்கி வருகின்றன. கரும்பு பயிரிட்டு, வெல்லம் தயாரித்து நகரங்களில் கொண்டுபோய் விற்பனை செய்கிறார்கள். மலாயா, சிலோன் போன்ற வெளி நாடுகளில் வியாபாரத் தொடர்பு உடையவர்கள் பலரும் உள்ளனர்.

---

இராமநாதபுரம் ராஜா

# S. இராமநாத சேதுபதியவர்கள்

வழங்கிய

# வாழ்த்துரை

—*—

சிவகங்கை தேவஸ்தானத்தைச் சேர்ந்த முறையூர் ஸ்ரீ மீனுட்சி சொக்கநாதர் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் நடைபெறப் போவதறிந்து மிக்க மகிழ்ச்சியடைகின்றேன். மெய்யன்பினுல் அயராது உழைக்கும் திருப்பணிக் குழுவினர்க்கு எனது மனமுவந்த பாராட்டுதல்.

எந்நாட்டவர்க்கும் இறைவஞகிய பரம்பொருள் தென்னுடுடைய சிவனுக விளங்குகிருன் என்பது மணிவாசகர் கூற்று. பாண்டி நாடே பழம்பதியாகவும் சிவராஜதானியாகவும் கொண்டு, சிவபெருமான், சோம சுந்தர பாண்டியனுக வந்து, அண்டமெலாம் புரக்கும் அன்னை அங்கயற் கண்ணியாகிய மீனுட்சியை மணந்து, வழுதி மருமகனுகி உலக முழுதும் ஆண்டான் என்பது புராண வரலாறு.

மலர்க் கூந்தல் குமரி, பாண்டியன் மகள் போல் கோலங்கொண்ட அங்கயற்கண்ணி, மீனைப் போன்று, தன் அருள் நோக்கினுல் எல்லா உயிர்களையும் இனிது வாழவைத்துக் கொண்டிருப்பதால் மீனுட்சி என்ற காரணப் பெயரைப் பெறுகிருள்.

ஆலவாயண்ணலும் அங்கயற்கண்ணியும் அம்மையப்பனுக முறையூரில் முறையே கோயில் கொண்டு எழுந்தருளி தம்மை வழிபடும் மெய்யடியார்க்கு தம் அருளை வாரி வழங்கிக் கொண்டிருக்கிருர்கள். சிவாலய கும்பாபிஷேகத்தால் கிடைக்கும் சிவ புண்ணியம் அளவிடற்பாலதன்று. 14—7—75 ஆம் நாள் நடைபெறும் கும்பாபிஷேக விழா எல்லா வகையாலும் சிறப்புற்று விளங்க, அங்கயற்கண்ணி சமேதராய் விளங்கும் ஆலவாய்ப் பெருமானின் திருவடிகளை வணங்கி வாழ்த்துகிறேன்.

வளர்க நம் சமயம் ! வாழ்க சைவ நன்நெறி !

“ தென்னுடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி ”.

மாதவஞ்சேர் மீனாட்சி வளர் உருவச் சிலையளித்த
சேதுபதி மன்னர் திருத்தோற்றம் காணீரோ !



## திருப்பணிக் குழுவினர்

| | | |
|---|---|---|
| திரு. | டி.எஸ். கார்த்திகேய வெங்கடாஜலபதி ராஜா அவர்கள் பரம்பரை அறங்காவலர், சிவகங்கை, | புரவலர். |
| ,, | ச. அழகப்ப செட்டியார் அவர்கள், முறையூர்., | தலைவர் |
| ,, | பெரி. பெரி. சின்னையா அவர்கள் | துணைத்தலைவர் |
| ,, | பி. ஆர். சொக்கநாதன் அம்பலம் அவர்கள் | ,, |
| ,, | எம். வேலு அம்பலம் அவர்கள், B.A.,B.L., தேவஸ்தான மானேஜர், (பதவி காரணமாக) | செயலாளர் & பொருளாளர் |

## உறுப்பினர்கள்

திரு. ஆர். எம். இராமசாமி செட்டியார் அவர்கள்
,, எம். வயிரவசுந்தரம் அவர்கள்
,, ஏ. என். ஜெயராஜன் செட்டியார் அவர்கள்
,, எஸ். பி. அருணசலம் பிள்ளை அவர்கள்
,, எம். ஆர். தெட்ணமூர்த்தி செட்டியார் அவர்கள்
,, சி. டி. சின்னத்தம்பி அம்பலம் அவர்கள்
,, எஸ். அண்ணமலை செட்டியார் அவர்கள்
,, எஸ். அழகு அவர்கள்
,, சி. சி. சொக்கலிங்கம் அவர்கள்
,, ஆர். கே. எஸ். பெரியகருப்பன் அம்பலம் அவர்கள்
,, எஸ். ராஜாங்கம் பிள்ளை அவர்கள்
,, எல். கருப்பையா அம்பலம் அவர்கள்
,, பி. ஆர். சிதம்பரம் அவர்கள்
,, எஸ். நாகப்ப பிள்ளை அவர்கள்
,, வி. பி. ஆர். பெருமாள் அவர்கள்
,, வி. சின்னண்ண அம்பலம் அவர்கள்
,, சி. சிறைமீட்டான் அவர்கள்
,, எஸ். வீரய்யா அம்பலம் அவர்கள்
,, வி. நாச்சியப்ப நாடார் அவர்கள்
,, ஏ. எல். கருப்பையா நாடார் அவர்கள்
,, சி. சுப்பையா வேளார் அவர்கள்
,, ஏ. எல். ஆறுமுக வேளார் அவர்கள்
,, சி. சண்முக ஆசாரி அவர்கள்
,, சி. வீரய்யா அவர்கள்
,, பெரி. சொக்கலிங்கம் அவர்கள்
,, அ. அழகன் அவர்கள்
,, எஸ். கிட்டுவய்யர் அவர்கள்



திருப்பணிக்குழு உறுப்பினர்கள்